22nd August 1960]

(இ) அக் கல்வெட்டுகளை அரசாங்கம் என்ன செய்திருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Yes, Sir.

(b) No expert opinion has so far been obtained.

(c) The matter has been remitted to the Government Epigraphist for India, Ootacamund, for necessary action.

SRI A. VEDARATHNAM: எவ்வளவு நாட்களில் அந்த ஆராய்ச்சியாளர்களிடமிருந்து பதிலை எதிர்பார்க்கலாம் ? அந்த இடத்தில் மேலும் பரிசோதனை செய்து மேலும் புதை பொருள்கள் கிடைக்கும் சாத்தியக் கூறுகள் இருக்கின்றனவா என்பதை அரசாங்கம் கவனிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: அதற்கு மேல் இருக்கிறதா என்பதைப் பற்றித் தகவல் இப்பொழுது என்னிடம் இல்லை. எவ்வளவு சீக்கிரம் அந்தப் பொருள் கிடைக்கும் என்று என்னால் இப்பொழுது சொல்ல முடியாது.

*Kadaladi Handloom Weavers' Co-operative Society*

* 366 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டம் போளூர் தாலூகா கடலாடி கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்தைப் பற்றி 10—8—1957-ல் பொது மக்களால் புகார் அனுப்பப்பட்டதா ?

(ஆ) அப்படியானால், அதன் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) Yes, Sir.

(b) The Deputy Registrar of Co-operative Societies, Vellore (South), enquired into the matter and found that the allegations were not substantiated and were without basis.

SRI S. M. ANNAMALAI: அந்த ரிப்போர்ட் 10—8—1957 அனுப்பப்பட்டு, ஏறத்தாழ மூன்று ஆண்டுகள் கழித்து இப்பொழுதுதான் நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது. அந்த சொசைட்டி ஏறத்தாழ மூன்று அல்லது நான்கு ஆண்டுகளாக சரிவர நடைபெறாமல் இருக்கிறது. அது சரிவர நடக்க இது வரையில் சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : The Government are taking action to revive the society. Allegations were made on 10th August 1957. Most of them were very frivolous and without any basis. It takes some time to collect all the material and then come to a conclusion.

SRI S. M. ANNAMALAI: இப்படிப் பல புகார்கள் அனுப்பினாலும் அதைப்பற்றி விசாரிக்க "டிபுடி ரிஜிஸ்ட்ரார்" வருவதற்கு ஏறத்தாழ இரண்டு மூன்று ஆண்டுகள் ஆகின்றன.

உடனடியாக நடவடிக்கை எடுத்துக் கொண்டால் அந்த சொசைட்டி சரிவர நடக்கும். அப்படி உடனடியாக நடவடிக்கை எடுத்துக் கொள்ளாமல் இருப்பதால்தான் பல புகார்கள் வந்துகொண்டிருக்கின்றன. விசாரணைக்கு வருவதற்கு இரண்டு மூன்று ஆண்டுகள் ஆகின்றபடியால்தான் அந்த சொசைடி சரிவர நடைபெறவில்லை. அதன் காரணமாக உடனடியாக அமைச்சர் அவர்கள் தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்வார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN: உண்மையான புகார்களாக இருந்தால் அவற்றை சுலபமாக விசாரிக்கலாம். ஆதாரமற்ற புகார்களை அனுப்பினல் அதைப்பற்றி விசாரிப்பதற்குக் கஷ்டமாக இருக்கிறது. அதற்கு மிகவும் கால தாமதம் ஆகிறது. அந்த சொசைட்டி மீது அனுப்பப்பட்ட புகார்கள் எல்லாம் ஆதாரமற்றவைகளாக இருக்கின்றன. அதனல் அவைகளைப்பற்றி விசாரிக்க காலதாமதமாகிறது. ஆதாரம் இருக்கிறதா என்று தேடிக் கண்டுபிடிக்க வேண்டியதாக இருக்கிறது. அதனல்தான் அந்த சொசைட்டி சம்பந்தமான புகார்களுக்கு நடவடிக்கை எடுத்துக்கொள்வதற்கு காலதாமதம் ஆகிறது.

*Potato cultivation*

* 367 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கோயமுத்தூர் ஜில்லா, கோபிச்செட்டிப்பாளையம் தாலுகா, தாளவாடி மலைப்பிரதேசத்தில் உருளைக் கிழங்கு உற்பத்திக்கான திட்டம் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறதா ?

(ஆ) அப்படியானல் விவரங்கள் யாவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI P. G. MANICKAM: உருளைக் கிழங்கு உற்பத்திக்கு மண் வளம் சீதோஷ்ண ஸ்திதி முதலியவைகள் நீலகிரி ஜில்லாவில் இருப்பது போன்றுதான் தாளவாடி மலைப் பிரதேசத்தில் இருக்கிறது என்பதை அரசாங்கம் பரிசீலனை செய்து, அங்கு உருளைக் கிழங்கு உற்பத்திக்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: உருளைக்கிழங்கு உற்பத்திக்கு மண் வளம் மட்டும் போதாது. காட்டு மிருகங்கள் உபத்ரவம் இல்லாமல் இருக்க வேண்டும். மண் அரிப்புக்கு இடம் இருக்கக்கூடாது. அம்மாதிரி இல்லாத பிரதேசங்களைப் பார்த்துத்தான் உருளைக்கிழங்கு பயிரிடுவதற்கு எவ்வளவு சாத்தியம் என்று பார்த்து அங்கே பயிரிடப்படுகிறது. அது விஷயத்தில் அரசாங்கம் கவனம் செலுத்தி வருகிறது.